# திருவையாறு சிவபெருமான் சன்னிதானத்தில் திருநந்திதேவர் விண்ணப்பம் செய்தருளிய

## பதினாறு பேறுகள்

மறைகள் நிந்தனை சைவநிந் தனைபொறா மனமும்
தறுக ணைம்புலன் களுக்கேவல் செய்யுறுச் சதுரும்
பிறவி தீதெனாப் பேதையர் தம்மொடு பிண்க்கும்
உறுதி நல்லறம் செய்பவர் தங்களோடு உறவும் 1

யாது நல்லன்பர் கேட்கினும் உதவுறும் இயல்பும்
மாத வத்தினோர் ஒறுப்பினும் வணங்கிடு மகிழ்வும்
ஓது நல்லுப தேசமெய் உறுதியும் அன்பர்
தீது செய்யினும் சிவச்செயல் எனக்கொளும் தெளிவும் 2

மனமும் வாக்கும் நின் அன்பர்பால் ஒருப்படு செயலும்
கனவி லும்உனது அன்பருக்கு அடிமையாம் கருத்தும்
நினைவில் வேறொறு கடவுளை வழிபடா நிலையும்
புனிதன் நின்புகழ் நாடொறும் உரைத்திடும் பொலிவும் 3

தீமை யாம்புறச் சமயங்கள் ஒழித்திடும் திறனும்
வாய்மை யாகவே பிறபொருள் விழைவுறா வளனும்
ஏழு றும்பர தாரநச் சிடாதநன் நோன்பும்
தூய்மை நெஞ்சின் யானெனதெனும் செறுக்குறாத் துறவும் 4

துறக்கமீது உறையினும் நரகில் தோய்கினும்
இறக்கினும் பிறக்கினும் இன்பம் துய்க்கினும்
பிறைக்கொழுந் தணிசடை பெரும் இவ்வரம்
மறுத்திடாது எனக்குநீ வழங்கல் வேண்டுமால் 5

**துதிவாணி வீறு விசயம் சந்தானம் துணிவு தனம்**
**மதி தானியம் சவுபாக்கியம் போகம் அறிவு அழகு**
**புதிதாம் பெருமை அறம் குல நோயகல் பூண்வயது**
**பதினாறு பேறும் தருவாய் மதுரைப் பராபரனே** 6